கழக வெளியீடு—சஉக

# தொல்காப்பியம்

# பொருளதிகாரம்

## அகத்திணையியல்
## புறத்திணையியல்



நச்சினார்க்கினியர் உரை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி : : சென்னை

# முன்னுரை

தொல்காப்பியம் என்னும் நூல் தமிழ் மொழியில் உள்ள நூல்களிலெல்லாம் மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்த இயல் நூலாகும். பண்டைக் காலத்துத் தமிழ்ப் பழங்குடிகளுள் ஒன்றான காப்பியக் குடியிற் பிறந்து சிறந்தோர் ஒருவரால் செய்யப்பட்டமையின், இஃது இப்பெயர் பெற்றது. காப்பியஞ் சேந்தனார் என்று பெயர் கொண்ட ஒரு புலவர் நற்றிணையில் ஒரு செய்யுளைப் பாடினோராகக் காணப்படுகின்றார். காப்பியாற்றுக் காப்பியனார் என்பது பதிற்றுப் பத்துள் ஒரு பத்தைப் பாடிய புலவர் பெயர். இவற்றாலும் காப்பியம் என்பது தமிழ் நாட்டோடே தொடர்புற்ற தமிழ்க்குடியைக் குறிப்பதாகவே அறியப்படும். தொல்காப்பியர் தமிழ்முனியாகிய அகத்தியர் இயற்றிய அகத்தியத்தை நிலைகண்டுணர்ந்தே இந்நூலைச் செய்தனர். இதை

"ஆன்ற பெருமை அகத்திய னென்னும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதல் நூல்
பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"

எனப் பன்னிருபடலப் பாயிரம் கூறுமாற்றால் தெளிக. இவர் சங்கம் வளர்த்த முதற்குடியிற் றோன்றிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து இந்நூலை அரங்கேற்றினரென்பதும், அதங்கோட்டாசான் என்ற புலவர் பெருமான் முன் அது நிகழ்ந்ததென்பதும் இந்நூற் பாயிரத்தால் தெளிதின் உணரப்படும்.

இவர் காலம் வடமொழி வியாகரணம் இயற்றிய பாணினியின் காலத்துக்கு முற்பட்டதென்பது பெரிதும் கருதத்தக்கது. தொல்காப்பியப் பாயிரத்திலேயே "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என இவர் சிறப்பிக்கப் படுகின்றார். வட மொழிக்கு ஐந்திரம் என்ற இலக்கணமே முற்பட்டிருந்ததென்பதும், அதற்குப் பின்னேயே பாணினீயம் தோன்றியதென்பதும் வடநூலாரும் ஒப்பும் உண்மையாகும். ஆதலின் தொல்

காப்பியம் பாணினியின் வடமொழி வியாகரணத்துக்கு மிகவும் முற்பட்டதென்பது தெளிந்த துணிபன்றே? "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என இவர் சிறப்பிக்கப்படுதற்குக் காரணம் என்னை எனின், தமிழ் மொழிக்குப் பேரிலக்கணம் செய்யப் புகுந்த இவர், அக்காலத்துச் சிறந்து விளங்கியிருந்த மற்றொருமொழியான வடமொழி இலக்கண வமைதியையும் நிலை கண்டுணர்ந்து இருமொழி அமைதியையும் அறிந்தமைந்த உரவோர் ஆயதைத் தெரிவிக்கவேண்டி எனக. மற்று இவர் வடமொழி இலக்கண மறிந்தமை கூறப்பட்டதன்றி, அகத்தியம் முதலிய தமிழிலக்கண நூலுணர்ச்சி பாயிரத்தில் குறிக்கப்படவில்லையெனின், அப்பாயிரமே முற்பகுதியில், 'முந்து நூல்கண்டு முறைப்பட எண்ணிப்—புலந்தொகுத்தோனே போக்கறு பனுவல்', எனத் தெள்ளிதின், உரைத்தமையால், தங்காலத்துக்கு முற்பட்ட தமிழிலக்கண நூல் முழுவதும் அவர் கண்டவர் என்பதும், அந் நூற்பொருள் முழுவதையும் தாம் முறைப்படுத்தினர் என்பதும், விரிந்து கிடந்த அந்நூற்பொருளை எல்லாம் தம் அஃகியகன்ற அறிவால் தொகுத்துக் கூறினார் என்பதும், ஆதலின் இங்ஙனம் செய்த நூல் எவ்வகைக் குற்றமுமற்று விளங்குவதென்பதும் தெளிய உணர்த்தப்பட்டன.

நூல் என்பது இக்காலத்து இலக்கண இலக்கியங்களையெல்லாம் குறிப்பினும், முற்காலத்து இலக்கண நூலையே வரைந்து குறித்தற்கும். நச்சினார்க்கினியரும் 'முந்நூல் அகத்தியமும் மாபுராணமும் பூதபுராணமும் இசைநுணுக்கமும்" என உணர்த்தியமை காண்க. பிற்காலத்துப் பவணந்தியால் செய்யப்பட்ட நன்னூலின் சிறப்புப் பாயிரத்தில்

"....................முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்"

என்று கூறப்படுகிறது. ஈண்டும் நூல் என்றே இலக்கணத்தைக் குறித்து, நன்னூல் அம்முந்து நூற்கு வழிநூலாகச் செய்யப்பட்டதென்று உணர்த்தப்பட்டமை காண்க. தொல்காப்பியத்துக்கு, முதல் நூலாகச் சிறந்த இலக்கணமான அகத்தியம் சுட்டப்படாமை போலவே, நன்னூற் பாயிரத்தும் அதற்கு முன்னைய சிறந்த இலக்கணமான தொல்காப்பியம் சுட்டப்படாமை காண்க. மேலும் தொல்காப்பியப் பாயிரத்தின் முற்பகுதியில்

வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி

என இலக்கியங்க ளெல்லாம் செய்யுள் என்று குறிக்கப்பட்டுப் போந்தமையால், நூல் என்பது இலக்கணத்தையே வரைந்துணாத்திறறெனபது தெளிவு.

ஆகவே, உலக வழக்கை யுணாந்து, பண்டைத் தமிழிலக்கியங்களை யாராய்ந்து, எழுத்துச் சொல் பொருள் என்பவற்றின் அமைதிகளை யுணர்ந்து, சிறந்த அகத்திய முதலாய இலக்கணங்களையும் தெளிந்து, இந்நூலைச் செய்தனா தொல்காப்பியா என்பது தெளியப்பட்ட உண்மையாம்.

எழுத்துச், சொல், பொருள் எனனும் மூன்றும் மூன்றதிகாரத்தால் கூறப்படுகின்றன. எழுத்தும் சொல்லும் தமிழ் மொழியின் அமைதியை விளக்குவன. பொருள் அத்தமிழ் மொழி வழக்கிறகு நிலைக்களனுயுள்ள தமிழரது ஒழுக்கத்தை எடுத்துக் காட்டுவதாகும்

இப்பொருளதிகாரம், தமிழரே உலகத் தோற்றத்தில் முதற்கண் நிலைபெற்ற பண்டைப் பெருங்குடியின ராவரென்பதைத் தெளிய உணருமாறு உரைத்துச் செல்கிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலப் பகுப்பு மக்கள் வாழ்க்கையிடம் படிப்படியாக மாறிய முறையையே தெரிவிப்பதாகு மன்றே? உலகத்தே முதலில மக்கள மரஞ் செறிந்த மலையிடத்தேயே தோன்றி, எதிர்ப்பட்ட விலங்குகளைக் கொன்றுண்டு வாழ்க்கை நடாத்திப், பின் காலப்போக்கில் முல்லை நிலத்தே வந்து தங்கி, வரகு முதலியன வித்திப் பயன்கொண்டு வாழ்ந்து, பின் மருத நிலத்தே ஆற்று நீரைத் தேக்கிப் பயன்கொண்டு, மேம்பட்ட உழுதொழில் செய்து வாழ்ந்து, பின் பல்வகைத் தொழிலும் பெருக்கி, நெய்த னிலத்தே பட்டினமமைத்துக் கடல் கடந்து நாவாய மூலம் சென்று வாணிகம் புரிந்து மேம்பாடுற்றமை வரலாற்றுண்மையன்றே?

கலதோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன் தோன்றி மூத்த குடி (புற-வெ-2-14)

என்று கூறிக், குறிஞ்சி நிலத்தையே மக்கட்டோற்றத்திற்கான முதலிடமாகக் குறிப்பிட்டமையும் காண்க.

மக்கட்பெருக்கததுக்குக் காரணராயிருந்த இத் தமிழக் குடியினரிடததே, அததனமைக் கேறபக் காதலும வீரமும சிறந்திருநதமையையும, அவவிரணடையும நுனிததறிநது வரையறை செயது நனமுறையில ஒழுகிவநததையுமே பொருளதிகாரம விரிததுப பேசுவதாகும.

காதலொழுககததை நுனிததறிநத தமிழர், அதைப புணாதல, பிரிதல, இருததல, இரஙகல ஊடல எனறைவகையாக வகுததுரைததனா இவை எநநிலததும நிகழுமாயினும நாடக வழககினும உலகியல வழககினும பாடல சானற புலனெறி வழககததால, இடம காலம முதலியவறறுட்படுததுக் கூறபபடடன

வீரவுணாவு மிகுநத தமிழா அவவீரததை அறநெறி வழுவாது ஓமபப போறறிய வகையும, அவாகள வீரததின மேமபாடும வகைபபடுததி உரைககபபடடன.

பொருளதிகாரம இவறறை அகவொழுக்கம, புறவொழுக்கம எனறு கூறுகிறது இவறறைச் சிறநதெடுதத துணாததுவதே அகததிணை இயல, புறததிணை இயல எனற இரணடுமான இபபொருளதிகாரப பகுதியாம. அகவொழுககமாயிறறு, இருபாலாருள ஒருவரோடொருவா மனமொனறிய காதலொழுககமாதலின புறவொழுககமாயிறறுச, சிறபபாகப பிறரின மாறுபடடு அறமும பொருளும கருதித தோனறும போரொழுக்கமாதலின அகவொழுககமலலாத பிற வெலலாம இப புறவொழுக்கததில அடஙகும.

அகததிணை இயல, தமிழா வாழும நிலம குறிஞசி, முல்லை, மருதம, நெயதல, (பாலை) எனப பகுககபபடு மெனபதும, அவவநநிலததில இன்னினன காலஙகள சிறநதன வெனபதும, அவவநநிலதது வாழ மக்கள குறவா, இடையா, உழவா, பரதவா, எயினா எனபபடுவா எனபதும, அவவநநிலததுத தெயவம, உணவு, விலஙகு, பறவை, மரம, பறை, செயதி, யாழ முதலியன வேறுவே றெனபதும, மககள காதலொழுககததில புணாதல, பிரிதல, இருததல, இரஙகல, ஊடல எனனுமைநதும நிகழுமெனபதும, மககள கலவி, பகை தூது, பொருள எனபன பறறிக் காதலியைப பிரிவரெனபதும, பிரிவினகண நறறுய, செவிலிததாய, தோழி, கணடோா, தலைவன எனபோா

கூறு முறை இவை என்பதும், காமஞ்சாலா இளமையோள் மாட்டுக் காதல் புரியும் கைக்கிளையினியல்பு, கழிபெருங் காமுகராய் ஒழுகும் பெருந்திணை இயல்பு இவை என்பதும் கூறுகின்றது.

இனிப் புறத்திணை இயல், பகையரசர் நாட்டிலுள்ள பசுக்களுக்குத் தீங்கு வாராமற் காத்தல் அறமெனக் கருதிப், போர் கொண்டெழுதற்கு முன் வெட்சிப்பூச் சூடிச் சென்று, அப் பசுக்களுக்கு ஓரிடையூறும் உண்டாகாவண்ணம் கவர்ந்து வரும் முறைகளும், பகைவர் அரணை அடைந்து உழிஞைப்பூச் சூடி, அவ்வரணிட்டத்து நின்று போருடற்றி, அரணைத் தம் வசப்படுத்தும் முறைகளும், மாற்றாரும் எதிர்ந்து வந்துழித், தும்பைப்பூச் சூடி அவரோடு போர்புரியும் முறைகளும், வென்றவழி வாகைப்பூச் சூடி வெற்றியைக் கொண்டாடும் முறைகளும், இவையன்றிப் பார்ப்பார், அரசர், வேளாளர், அறிவர், தாபதர், பொருநர் என்போர் சிறந்து மேம்படும் முறைகளும், நிலையா உலகத்து இயல்பும், பிறர் மேம்பாட்டைப் புகழ்ந்து பாடும் முறையும் கூறுகின்றது.

காதலைத் தூயமுறையில் நுனித்தறியும் பேருணர்வுடன், உலகில் தோன்றிய பழங்கால மக்கட் கூட்டத்தினரிடையே மேம்பட்டுத் தோன்றுதற்கான குணமாய வீரவுணர்வும் வாய்ந்த நனிநாகரிகர் தமிழ் மக்கள் என்பதை யுணர்த்தும் இத் தொல்காப்பியம், தமிழரின் பழம் பண்பாட்டை யுணர்த்திய ஒரு தனிப்பெரு நூலாயது பெரிதும் உணரத்தக்கது.

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

கடவுள் துணை.

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### நச்சினார்க்கினியம்

---

முதலாவது

## அகத்திணையியல்

---

**௧. கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப.**

என்பது சூத்திரம்.

நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின் இது பொருளதிகாரமென்னும் பெயர்த்தாயிற்று. இது நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற்போல்வதோர் ஆகுபெயர். பொருளாவன.—அறம் பொருள் இன்பமும், அவற்றது நிலையின்மையும், அவற்றின் நீங்கிய வீடுபேறுமாம். பொருளென்பது பொதுப்படக் கூறவே, அவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியும், காட்சிப்பொருளும், கருத்துப்பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும், பிறவும் பொருளாம்.

எழுத்துஞ் சொல்லும் உணர்த்தி அச்சொற்றொடர் கருவியாக உணரும் பொருள் உணர்த்துதலின், மேலதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. அகத்திணைக்கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளும் உணர்த்துப. இது வழக்கு நூலாதலிற் பெரும்பான்மையும் நால்வகை வருணத்தார்க்கும் உரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறமுஞ் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க. பிரிதனிமித்தங் கூறவே, இன்ப நிலையின்மையுங் கூறிக் 'காமஞ் சான்ற' என்னுங் கற்பியற் சூத்திரத்தால் துறவறமுங் கூறினார்.

வெட்சிமுதலா வாகையீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலையின்மையுங் கூறினார். 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' *என்னுஞ் சூத்திரத்தான் இல்லறமுந் துறவறமுங் கூறினார். இந்நிலையாமையானும் பிறவாற்றானும் வீட்டிற்குக் காரணங் கூறினார். இங்ஙனங் கூறவே, இவ்வாசிரியர் பெரிதும் பயன்றருவதோர் இலக்கணமே கூறினாராயிற்று, இதனைச் செய்த புலனெறி வழக்கினை யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியாற் றுறைபோவராதலின்.

இப்பொருளை எட்டுவகையான் ஆராய்ந்தாரெனப; அவை அகத்திணை புறத்திணையென இரண்டு [1] திணை வகுத்தது, அதன்கட் கைக்கிளை முதற் பெருந்திணையிறுவாயேழும் வெட்சி முதற் பாடாண்டிணையிறுவாயேழுமாகப் பதினான்கு [2] பால் வகுத்தது, ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலி பரிபாடல் மருட்பாவென அறுவகைச் [3] செய்யுள் வகுத்தது, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென நால்வகை [4] நிலன் இயற்றிச் சிறுபொழுதாறும் பெரும்பொழுதாறுமாகப் பன்னிரண்டு [5] காலம் வகுத்தது, அகத்திணை வழுவேழும் புறத்திணை வழுவேழுமெனப் பதினான்கு [6] வழு வமைத்து, நாடக வழக்கும் உலகியல் வழக்குமென இருவகை [7] வழக்கு வகுத்து, வழக்கிடமுஞ் செய்யுளிடமுமென இரண்டு [8] இடத்தான் ஆராய்ந்தாராதலின். எட்டிறந்த பலவகையான் ஆராய்ந்தாரென்பார் முதல் கரு உரியுந், திணை தொறுமரீஇய பெயருந், திணைநிலைப் பெயரும், இருவகைக் கைகோளும், பன்னிருவகைக் கூற்றும், பத்துவகைக் கேட்போரும், எட்டுவகை மெய்ப்பாடும், நால்வகை உவமமும், ஐவகை மரபு மென்பார்

இனி, இவ்வோத்து அகத்திணைக்கெல்லாம் பொது இலக்கண முணர்த்துதலின் அகத்திணையியலென்னும் பெயர்த்தாயிற்று; என்னை? எழுவகை யகத்திணையுள் உரிமைவகையால் நிலம்பெறுவன இவையெனவும் அந்நிலத்திடைப் பொதுவகையால் நிகழ்வன கைக்கிளை பெருந்திணை பாலை யெனவுங் கூறலானும், அவற்றுட் பாலைத்திணை சிலவகையால் நடுவணதெனப்பட்டு நால்வகை யொழுக்கம் நிகழாநின்றுழி அந்நான்கனுள்ளும் பிரிதற்பொருட்டாயத் தான் பொதுவாய் நிற்குமெனக் கூறலானும், முதல் கரு உரிப்பொருளும் உவமங்களும் மரபும் பொதுவகையாற் கூறப்படுதலானும், பிறவும் இன்னோரன்ன பொதுப் பொருண்மைகள் கூறலானு மென்பது. இங்ஙனம் ஓதிய அகத்திணைக்குச் சிறப்பிலக்கணம் ஏனை ஓத்துக்களாற் கூறுப.

ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும்

* தொல். புறத். எரு.

ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். எனவே, அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம்.

இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமே யன்றி எல்லார்க்குந் துய்த்துணரப் படுதலானும், இவை இவ்வாறிருந்த தெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், அவை புறமெனவே படும். இன்பமே யன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாலெனின், அதுவும் காமங் கண்ணிற்றேல் இன்பத்துள் அடங்கும். ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனாகாமை மறைக்கப்படாமையிற் புறத்திணைப்பாலதாம். காம நிலையின்மையான வருந் துன்பமுந் 'தாபதநிலை' 'தபுதாரநிலை' *யென வேறும். திணையாவது ஒழுக்கம், இயல் இலக்கணம், எனவே, அகத்திணை யியலென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கணமென்றவாறாயிற்று. இவ்வோத்துக்கள் ஒன்றற்கொன்று இயைபுடைமை அவ்வவ் வோத்துகளுட் கூறுதும்

இனி, இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனிற் கூறக் கருதிய பொருளெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்.—கைக்கிளை முதலா-கைக்கிளை யெனப் பட்ட ஒழுக்கம் முதலாக, பெருந்திணை இறுவாய்-பெருந்திணை யென்னும் ஒழுக்கத்தினை இறுதியாகவுடைய ஏழனையும், முற்படக் கிளந்த எழுதிணை என்ப-முற்படக் கூறப்பட்ட அகத்திணை யேழென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு

எனவே, பிற்படக் கூறப்பட்ட புறத்திணையும் ஏழுளவென்ற வாறாயிற்று. எனவே, இப்பகுதினன்கு மல்லது வேறு பொருளின்றென வரையறுத்தாராயிற்று அகப்புறமும் அவை தம்முட் பகுதியாயிற்று முதலும் ஈறுங் கூறித் திணையேழெனவே 'நடுவணைந் திணை'† உளவாதல் பெறுதும், அவை மேற் கூறுப.

கைக்கிளை யென்பது ஒரு மருங்கு பற்றிய கேண்மை. இஃது ஏழாவதன் தொகை எனவே, ஒருதலைக் காமமாயிற்று. எல்லா வற்றினும் பெரிதாகிய திணையாதலிற் பெருந்திணையாயிற்று. என்னை? எண் வகை மணத்தினுள்ளுங் கைக்கிளை முதல் ஆறு திணையும் நான்கு மணம் பெற்ற, தான்னொன்றுமே நான்கு மணம் பெற்று நடத்தலின். பெருந்திணையிறுவாய்-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. முற்படக் கிளந்த வென எடுத்த லோசையாற் கூறவே பிற்படக் கிளந்த ஏழு திணை யுளவாயிற்று. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்திணை என வரும்.

* தொல். புறம் ௭௬ † தொல். அகம் ௨.

ஒழிந்தோர் பன்னிரண்டென்றாராதலிற் புறத்திணை யேழென்றதெனனையெனின, அகங்கை இரண்டுடையார்க்குப புறங்கை நானகாகாது இரண்டாயவாறுபோல, அகத்திணை யேழற்குப புறததிணை யேழென்றலே பொருத்தமுடைத்தா யிற்று. எனவே, அகததிணைககுப புறத்திணை அவ்வந் நிலத்து மககள வகையாற பிறநத செயகை வேற்றுமையாதலின ஒன றொன்றற்கு இனறியமையாதவா றாயிற்று. காநதை அவ வேழற்கும பொதுவாகிய வழுவாதலின, வேறு திணயாகாது. எணவகை மணனும எதிரசென்று கூறுவதாகலானும, காமஞ் சாலா விளமைப்பருவம அதனகணண தாகலானுங கைக் கிளையை முறகூறினா. எனப வென்றது அகத்தியனுரை. இக குறியீடுகளும அகத்தியனுரிட்ட வென்றுணாக (க)

உ. அவற்றுள்,
நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.

இது முறகூறிய ஏழனுள தமக்கென நிலம பெறுவனவும நிலம பெறாதனவுங் கூறுகின்றது.

இதனபொருள —அவற்றுள-முறகூறிய ஏழு திணையுள, நடுவண ஐந்திணை-கைககிளை பெருந்திணைககு நடுவுநின்ற ஐந் தொழுககததினை, படு திரை வையம பாத்திய பணபே-ஒலிக்குந் திரைசூழ்நத உலகிற்கு ஆசிரியன பகுததுக கொடுதத இலக் கணததை, நடுவணது ஒழிய-நடுவணதாகிய பாலையை அவ வுலகம பெறாதே நிறகுமபடியாகச செயதாா எனறவாறு.

எனவே, யானும அவவாறே நூல செயவ லெனறாா.

உலகத்தைப படைககினற காலத்துக் காடும மலையும நாடுங் கடறகரையுமாகப படைதது, இநநால்வகை நிலததிற்கு ஆசிரியன தான படைதத ஐவகை ஒழுககததிற பாலை யொழிந் தனவறறைப பகுததுக கொடுததான. அப பாலை-ஏனையபோல ஒருபாற படாது நாலவகை நிலததிறகும உரியவாகப் புலனெறி வழககஞ்செயது வருதலபறறிப பாலைககு நடுவணதெனனும பெயா ஆட்சியுங் குணனுங் காரணமாகப பெறறபெயா. 'நடுவு நிலைததிணையே நணபகல வேனில' *என ஆளப. புணர்தல், இருததல், இரங்கல, ஊடல எனபவறறிறகு இடையே பிரிவு நிகழதலானும, நாலவகை யுலகததிறகிடையிடையே,

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற றிரிநது
நலலியல்பு ழிநது நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங கொளளும்" (சிலப்-காடு-64-66.)

* தொல். அகத் க.

என முதற்பொருளைப்பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவணதாகிய நண்பகற்காலந் தனக்குக் காலமாகலானும், புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவு வைத்தலானும், உலகியற் பொருளான அறம்பொரு ளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான் காரணமாகலானும், நடுவணதெனக் குணங் காரணமாயிற்று.

பாயிரத்துள் எல்லை கூறியதன்றி ஈண்டும் எல்லை கூறினார், புறநாட்டிருந்து தமிழ்ச்செய்யுள் செய்வாரக்கும் இதுவே இலக்கணமாமென்றற்கு.

இவ்விலக்கணம் மக்கள் நுதலிய அகனைந்திணைக்கேயாத லின் இன்பமே நிகழுந் தேவர்க்கு

'காமப் பகுதி கடவுளும் வரையார்' (தொல்-பொருள் 83)

நடுவணதிணை யென்றது ஐந்திணை யென்றார், பாலையும் அவற்றோ டொப்பச் சேர்த்தற்கு. இத்திணையை மூன்றாக மேற் பகுப்பர். (உ)

௩. **முதல்கரு வுரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங் காலை.**

இது நடுவணைந்திணையைப் பகுக்கின்றது.

இதன் பொருள் —பாடலுள் பயின்றவை நாடுங் காலை-புல னெறி வழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங் காலத்து, முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே-முதலுங் கருவும் உரிப் பொருளும் என்ற மூன்றேயாம், நுவலுங் காலை முறை சிறந் தனவே-அவை தாம் செய்யுள் செய்யுங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடைய என்றவாறு

இங்ஙனம் பாடலுட் பயின்ற பொருண்முறை மூன்றெனவே, இம் மூன்றும் புறத்திணைக்கும் உரியவென்பது பெறுதும். அது புறத்திணைச் சூத்திரங்களுள், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' (௫௬) என்பன முதலியவற்றாற் கூறுப.

முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளுஞ் சிறந்துவரும். இம்மூன்றும் பாடலுட் பயின்று வருமெனவே வழக்கினுள் வேறு வேறு வருவதன்றி ஒருங்கு நிகழாவென்பதூஉம், நாடுங் காலை யெனவே புலனெறிவழக்கிற் பயின்றவாற்றான் இம்மூன் றனையும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்கு நோக்கி இலக் கணங் கூறப்படாதென்பதூஉம் பெறுதும், 'நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலின' (தொல். பாயிரம்) என்று புகுந்தமையிற் பொருளும் அவ்விரண்டினாலும் ஆராய்தல் வேண்டுதலின்.

இஃது இல்லதெனப்பட்டது, உலகியலேயாம். உலகியலின் றேல், ஆகாயப்பூ நாறிற்றென்றுழி அது சூடக் கருதுவாரு

மின்றி மயங்கக் கூறினுனென்று உலகம் இழித்திட்டப்படுதலின் இதுவும் இழித்திடப்படும் இச் செய்யுள் வழக்கினை நாடகவழக் கென மேற்கூறினா, எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனுக இல்லது புணர்த் தன முதலாகப் புனைந்துரைவகையாற் கூறும் நாடக இலக் கணம்போல யாதானுமோரோவழி ஒரு சாராாமாட்டு உலகிய லான நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இட மும் காலமும் நியமித்துச் செய்யுட் செய்த ஒப்புமை நோக்கி. மற்று இலலோன் தலைவனுக இல்லது புணாக்கும் நாடகவழக் குப்போல் ஈண்டுக் கொள்ளாமை, 'நாடக வழக்கு' என்னுஞ் சூத்திரத்துட் (ருந) கூறுதும்.

"கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாட னல்வய லூரன்
தண்கடற் சோப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்புங்
காலை வரினுங் களைஞரோ விலரே" (ஐங்குறு-183)

என இவ் ஐங்குறுநூற்றுள் இடம் நியமித்துக் கூறியது செய்யுள் வழக்கு.

இனி, அவை முறையே சிறந்து வருமாறு:—

"முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய இரலை தெறிப்ப
மலாந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
காரசெய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண தோன்றும் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவின் உறந்தைக் குணது
நெடுங்கொடு நுடங்கும் அட்ட வாயில்
போதவிழ் அலரின் நாறும்
ஆய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே" (அகம் 4)

இது குறித்த காலம் வந்தது, அவரும் வந்தாரென ஆற்று வித்தது. இக்களிற்றியானை நிரையுண், முல்லைக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

“கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு
முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்தத்
வாணிற வுருவின் ஒளிறுபு மின்னிப்
பருஉவுறைப் பஃறுளி சிதறிவான் நவின்று
பெருவரை நளிர்சிமை அதிர வட்டித்துப்
புயலே றுரைஇய வியலிருள் நடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயல்
றடைஇத் திரண்டநின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயும்
இருண்மயங்கு யாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடரகம் வரலரி தென்னாய்
வரவெளி தாக வெண்ணுதி யதனால்
நுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
தண்ணிது கமழுநின் மார்பொரு நாள்
அடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்தும் அதுவே
அன்னை யறியினு மறிக அலர்வாய்
அம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
வண்டிறை கொண்ட வெரிமருள் தோன்றியொடு
ஒண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே” (அகம்-218)

இஃது இடைத்துய்த்துப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டான் வரைவுகடாயது. இம் மணிமிடைபவளத்துட், குறிஞ்சிக்கு முதலுங் கருவும்வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

“வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறுகோட் டியானைப் பொதினி* யாங்கண்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியலம் என்ற சொற்றாம்
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்
நிழல்தேய்ந் துலறிய மரத்த அறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை ஆமறப் புலர்தலின்
உகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குநர் இன்மையின் வௌவுநர் மடியச்

* ‘பொதினி’ என்பது ஒரு மலை.

சுரம் புல்லென்ற ஆற்ற அலங்குசினை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரல் அங் கடுவளி எடுப்ப ஆருற்
றுடைதிரைப் பிதிர்வின் பொங்கிமுன்
கடல்போலத் தோன்றல காடிறந் தோரே." (அகம்-1.)

இது பிரிவிடையாற்றாது தோழிக்குக் கூறியது. இக் களிற்றியானை நிரையுட், பாலைக்கு முதலுங் கருவும்வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

"சேற்றுநிலை முனைஇய‡ செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தல்
பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை யென்ப அஃதியாங்
கூறேம் வாழியர் எந்தை செறுநர்
களிறுடை அருஞ்சமந் ததைய நூறும்
ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னஎம்
ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெரும நின் தகைக்குநர் யாரோ.' (அகம்-46.)

இது வாயில் மறுத்தது. இக் களிற்றியானை நிரையுள், மருதத்திற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. 'வண்டூது பனிமல' ரெனவே வைகறையும் வந்தது.

"கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண் டார்க்கும் அல்குறு காலைத்
தாழை தளரத் தூங்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் அருளா ராயினும்

‡ 'முனை இய' என்றும் பாடம்.

அருஅ லியரோ அவருடைக் கேண்மை
அளிஇன் மையின் அவணுறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்
இன்றுயின் மாயிற் சென்றஎன் நெஞ்சே." (அகம்-40)

இது பொருட் பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது. இக் களிற்றியானை நிரையுள், நெய்தற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. இச்சிறப்பானே முதலின்றிக் கருவும் உரிப்பொருளும் பெறுவனவும், முதலுங் கருவுமின்றி உரிப்பொருளே பெறுவனவுங் கொள்க.

"திருநகர் விளங்கு மாசில் கற்பி
னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யெவனோ முன்னை
யிரும்பல் கூந்த னூற்று
முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே"

இது பொருள்வயிற் பிரிந்தோன் சுரத்து நினைந்து உரைத்தது. இது முதற்பொருளின்றி வந்த முல்லை.

"காந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
யிளைய ரேவ வியங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே."

இது வந்தாரென் றுற்றுவித்தது இது முதலுங் கருவுமின்றி வந்த முல்லை.

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்திய வூழேனல்-பிறையெதிர்ந்த
தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு." (திணை, 150-1)

இது மதியுடம்படுத்தது. இது முதற்பொருளின்றி வந்த குறிஞ்சி.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

இஃது இளையள் விளைவிலளென்றது. முதலுங் கருவு மின்றிவந்த குறிஞ்சி. இது நாணநாட்டம்.

> "நாளு நாளு மாளவினை யழுங்க
> வில்லிருந்து மகிழுவோர்க் கில்லையாற் புகழென
> வொண்பொருட் ககலவாங் காதலா
> கண்பனி துடையினித் தோழி நீயே" (சிற்றெட்டகம்.)

இது வற்புறுத்தாற்றியது, இஃது உரிப்பொருளொன்று மே வந்த பாலை.

> "பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை
> முன்னும் பின்னு மாகி
> யின்னும் பாண னெம்வயி னானே."

இது வாயின் மறுத்தது. இஃது உரிப்பொருளொன்றுமே வந்த மருதம்.

> " அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்
> பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
> யேதின் மாக்களு நோவா தோழி
> யொன்று நோவா ரில்லைத்
> தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே."

இது கழிபடர். இது பேரானும் உரிப்பொருளானும் நெய்த லாயிற்று.

இங்ஙனங் கூறவே உரிப்பொருளின்றேற் பொருட் பயனின் றெனபது பெற்றாம் இதனானே முதல் கரு வுரிப்பொருள் கொண்டே வருவது திணையாயிற்று. இவை பாடலுட் பயின்ற வழக்கே இலக்கணமாதலின் இயற்கையாம். அல்லாத சிறு பான்மை வழக்கினைச் செயற்கையென மேற்பகுப்பர். (௩)

௪. முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.

இது நிறுத்தமுறையானே முதல் உணர்த்துவான் அதன் பகுதியும் அவற்றுட் சிறப்புடையனவும் இல்லனவுங் கூறு கின்றது.

இதன்பொருள்:—முதல் எனப்படுவது - முதலெனச் சிறப் பித்துக் கூறப்படுவது, நிலம் பொழுது இரண்டின் இயல்பு என மொழிப - நிலனும் பொழுதும் என்னும் இரண்டினது இயற்கை நிலனும் இயற்கைப் பொழுது மென்று கூறுப, இயல்பு உணர்ந் தோரே - இடமுங் காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.

இயற்கையெனவே செயற்கை நிலனுஞ் செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் 'பாத்திய' (உ) நான்கு நிலனும் இயற்கை நிலனும்

ஐந்திணைக்கு வகுத்த பொழுதெல்லாம் இயற்கையாம்; செயற்கை நிலனும் பொழுதும் முன்னர் அறியப்படும்.

முதல் இயற்கைய வென்றதனாற் கருப்பொருளும் உரிப்பொருளும் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சிறப்புஞ் சிறப்பின்மையும் உடையவாயச் சிறுவரவினவென மயக்கவகையாற் கூறுமாறு மேலே கொள்க. இனி நிலத்தொடு காலத்திணையும் முதலென்றலிற் காலம்பெற்று நிலம்பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக்காலத்து நிகழுங் கருப்பொருளுங் கொள்க. அது முன்னர்க் காட்டிய உதாரணத்துட் காண்க. (௪)

௫. மாயோன் மேய காடுறை உலகமுஞ்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.

இது 'நடுவணது' (உ) ஒழிந்த நான்கானும் அவ் 'வையத்'தைப் பகுக்கின்றது.

இதன்பொருள் —மாயோன் மேய காடு உறை உலகமும், சேயோன் மேய மை வரை உலகமும், வேந்தன் மேய தீம் புனல் உலகமும், வருணன் மேய பெரு மணல் உலகமும் - கடல்வண்ணன் காதலித்த காடுறையுலகமுஞ், செங்கேழ் முருகன் காதலித்த வான் தங்கிய வரைசூழுலகமும், இந்திரன் காதலித்த தண்புனனாடுங், கருங்கடற் கடவுள் காதலித்த நெடுங்கோட்டெக்கர் நிலனும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என சொல்லிய முறையால் சொல்லவும் படுமே - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென ஒழுக்கங் கூறிய முறையானே சொல்லவும் படும் என்றவாறு.

இந்நான்கு பெயரும் எண்ணும்மையோடு நின்று எழுவாயாகிச் சொல்லவும்படும் என்னுந் தொழிற்பயனிலை கொண்டன. என்றது இவ்வொழுக்கம் நான்கானும் அந்நான்கு நிலத்தையும் நிரனிறை வகையாற் பெயர் கூறப்படுமென்றவாறு. எனவே, ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடமாயிற்று.

உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும் படுமென்பது பொருளாயிற்று. அது தொகைகளினுங் கீழ்க்கணக்குகளினும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க.

முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன் தருதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்.

உதாரணம்.—"அரைசுபட்ட கடந்தட்டு" என்னு முல்லைக் கலியுட்,

"பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுதும்" (கலி-105)

எனவரும்,

"மடையிடுவான் மறங்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்." (கலி-109)

என அவன் மகனாகிய காமனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் 'அவ்வகை பிறவுங் கருவென மொழிப,' (கஅ) என்புழி வகை யென்றதனாற் கொள்க.

இனிக் குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ வெறியயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு வெறியயர்ப வாகலின், ஆண்டு முருகன் வெளிப்படுமென்றார்.

அது, "அணங்குடை நெடுவரை" என்னும் அகப்பாட்டினுட்,

"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவள்." (அகம்-22)

எனவரும் "சூரர மகளிரோ டுற்ற சூளே"* என்புழிச் சூரர மகளிர் அதன் வகை.

இனி ஊடலுங் கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கு மருத நிலத்திற்குத் தெய்வமாக "ஆடலும் பாடலு மூடலு முணர்தலும்" உள்ளிட்ட இன்பவிளையாட்டு இனிதினுகரும் இமையோர்க்கும் இன்குரலெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவுசெய்து அழைத்தலின் அவன் வெளிப்படுமென்றார்.

அது,

"வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்தமை
தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு." (கலி-98)

என இந்திரனைத் தெய்வமென்றதனானும், இந்திர விழவூ ரெடுத்த காதையானும் உணர்க.

இனி நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலை வளந் தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின், ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார்.

* குறுந்தொகை 53.

அவை,

"சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினோன்" (பத்து-பட்டின-86, 87.)

எனவும்,

"கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி" (அகம்-110)

எனவும்,

"அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமொ டயரும்" (அகம்-240)

எனவும் வரும்.

இனிப் பாலைக்குச்,

"சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ" (கலி-16,)

எனவும்,

"வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ" (கலி-16)

எனவும் ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற் றோன்றிய மழையினையுங் காற்றினையும் அத்தெய்வப் பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்குமென்பது வேதமுடிபாகலின், ஆதித்தன் எல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற் பொருளோடு கூட்டிக் கூறியது தெய்வவழி பாட்டு மரபிதுவே, ஒழிந்தது மரபன்றென்றற்கு. எனவே அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலைக்குந் தெய்வமாயிற்று.

உறையுலகென்றார், ஆவும் எருமையும் ஆடும் இன்புற்று மாற்றல் நிலைபெறும் அக்காட்டின் கடவுளென்றற்கு. மைவரை எனவே மழைவளந் தருவிக்கும் முருகவேளென்றார். இந்திரன் யாற்றுவளனும் மழைவளனுந் தருமென்றற்குத் தீம்புனலென்றார். திரைபொருது கரை கரையாமல் எக்கர் செய்தல் கடவுட்கருத்தென்றற்குப் பெருமணலென்றார்.

இனி, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற முறையென்னை? யெனின், இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. எனவே, முல்லையென்ற சொற்குப் பொருள் இருத்தலாயிற்று "முல்லை சான்ற முல்லையம் புறவின்"* என்பவாகலின், புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன

* பத்து-சிறுபாண் 169.

பின வைத்தார். இதறகுதாரணம இறந்தது. "கருங்காற் குறிஞசி சானறவெற பணிந்து"† எனபது கரு. புணர்ச்சிப பின ஊடல நிகழ்தலின அதனபின மருததததை வைததாா. "மருதஞ சானற மருதத தணபணை"‡ எனபுழி மருதமெனறது ஊடியுங கூடியும போகம நுகாதலை. பரததையிற பிரிவுபோலப பிரிவொபபுமை நோககி நெயதலை ஈற்றினகண் வைததாா. நெயதற பறையாவது இரஙகற பறையாதலின, நெயதல் இரககமாம.

'ஐதக லலகுன் மகளிர்
நெய்தல கேளன்மார் நெடுஙகடை யானே" (புறம்-389)

என வரும.

இனி இவவாறனறி முல்லை முதலிய பூவாற பெயாபெறறன இவவொழுககஙகளெனின, அவவநிலஙகடகு ஏனைபபூககளும உரியவாகலின அவறறாற பெயாகூறலும உரியவெனக கடாயி னறகு விடையினமை உணாக.

இதனானே நடுவு நிலைததிணையொழிநத நானகறகும பெயரும முறையுங கூறினன இந்நானகும உரிபபொருளாதல 'புணாதல பிரிதல'* எனபுழிக கூறுதும. கருபபொருளாகிய தெயவததை முதறபொருளோடு கூறியது, அவை 'வநத நிலத் தின பயதத'† மயஙகுமாறுபோல மயஙகாது இதுவெனறற குங கருபபொருளுடைத தெனபபடட பாலைககுத தெயவததை விலககுதறகுமென றுணாக.

உதாரணம —

'வன்புலக்காடடு நாடடதுவே" (நற்றிணை-59)

எனவும,

"இறும்பு படடிருளிய விடடருஞ
சிலமபிற கன்மிசைச சிறுநெறி" (அகம்-128)

எனவும,

"அவவய னண்ணிய வளஙகே ழூரன" (அகம்-26.)

எனவும,

"கானலுங கழறாது * * * மொழியாது" (அகம்-170)

எனவும நாலவகை யொழுககததிறகு நால்வகை நிலனும உரியவாயின வாறு காணக. (ரு)

சு. காருமமாலையும முலலை குறிஞசி
கூதிர் யாமம என்மனார் புலவர்.

† பதது-மதுரை-300 ‡ பத்து-சிறுபாண்.186.
* தொல-பொருள கச. † தொல-பொருள கக.

இது முதலிரணடனுள நிலஙகூறிக காலஙகூறுவான முல் லைக்கும குறிஞசிககும பெருமபொழுதுஞ சிறுபொழுதுங கூறுதனுதலிறறு.

இதனபொருள :—காரும மாலையும முல்லை—பெருமபொழு தினுட காரகாலமுஞ சிறுபொழுதினுள அககாலதது மாலையும முலலை யெனபபடும, குறிஞசி கூதிர யாமம எனமனா புலவா— பெருமபொழுதினுட கூதிரககாலமுஞ சிறுபொழுதினுள அத னிடை யாமமுங குறிஞசி யெனபபடும எனறவாறு

முதல கரு உரிபபொருளென னும மூனறுபாலுங கொணடு ஓா திணையாமெனறு கூறினரேனும ஒரு பாலினையுந திணை யெனறு அபபெயரானே கூறினா, வநதான எனபது உயா திணை எனறாறபோல. இது மேலனவறறிறகும ஒககும இக காலஙகடகு விதநது ஓா பெயா கூறுது வாளா கூறினா, அப பெயா உலகவழககமாய அபபொருள உணரநிறறலின. கால வுரிமை எயதிய ஞாயிறறுககு உரிய சிஙகவோரை முதலாகத தணமதிககு உரிய கறகடகவோரை யீறாக வநது முடியுந்துணை ஓர் யாண்டாமாதலின அதனை இமமுறையானே அறுவகைப் படுதது இரணடு திஙகள ஒருகால மாககினா. இனி ஒரு நாளினைப படுசுடரமையந தொடஙகி மாலையெனவும, அதனபின இடையாம மெனவும, அதனபின விடிய லெனவும, அதனபின காலை யெனவும, அதனபின நணபக லெனவும, அதனபின எற பாடெனவும ஆறுகப பகுததாா. அவை ஒரோவொனறு பதது நாழிகையாக இமமுறையே சூததிரஙகளுட சிறுபொழுது வைப பா. பினபனியும நணபகலும பிறகூறிய காரணம அசசூததிரத் துக் கூறுதும

முல்லைககுக் காரும மாலையும உரியவாதறகுக காரண மெனனை? யெனின, பிரிந்து மீளுந தலைவனறிறமெலலாம பிரிந திருநத கிழததி கூறுதலே முலலைப பொருளாயும, பிரிநது போகினறானதிறஙகூறுவனவெலலாம பாலையாகவும வருதலின, அமமுலலைப பொருளாகிய மீடசிககுந தலைவி இருததறகும உபகாரபபடுவது காரகாலமாம, எனனை? வினைவயிற பிரிநது மீளவோன, விரைபரித தேரூர்நது பாசறையினினறு மாலைக காலதது ஊாவயின வரூஉங காலம ஆவணியும புரட்டாதியும ஆதலின, அவை வெபபமுந் தடபமும மிகாது இடை நிகாதத வாகி ஏவல செயதுவரும இளையோாககு நீரும நிழலும பயதத லானும, ஆாபதம மிககு நீரும நிழலும பெறுதலிற களிசிறநது மாவும புளளுந துணையோ டினபுறறு விளையாடுவன கணடு தலைவறகுந தலைவிககுங காமககுறிபபு மிகுதலானுமெனபது. புல்லை மேயந்து கொலலேறறோடே புனிறறாக கனறை நினைநது மனறிற புகுதரவுந் தீஙகுழ லிசைபபவும பந்தாமுலலை வநது மணங கஞறறவும வருகினற தலைவறகும இருநத தலைவிககுங காமக்குறிபபுச் சிறததலின அககாலதது மாலைபபொழுதும உரித்தாயிறறு,

இனிக் குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின் களவு நீட்டிப்பக் கருதுந் தலைவற்குக் களவினைச் சிறப்பிக்குங்கால், தலைவி அரியளாகவேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிரும் அதன் இடையாமமுமென்பது. என்னை? இருள் தூங்கித் துளி மிகுதலிற் சேறல் அரிதாதலானும், பானாட் கங்குலிற் பரந்துடன் வழங்காது மாவும் புள்ளுந் துணையுடன் இன்புற்று வதிதலிற் காமக் குறிப்புக் கழியவே பெருத்தலானுங், காவன் மிகுதி நோக்காது வருந் தலைவனைக் குறிக்கண்ணெதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின், இந்நிலத்திற்குக் கூதிர்க் காலஞ் சிறந்ததெனப்படும்.

உதாரணம்:—

"விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்
காரு மார்கலி தலையின்று தேரும்
ஓவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வாய் ஆழி உள்ளுறு புருளக்
கடவுக் காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயங்
கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரு நனைநகு மாலைத்
*தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மகன் ஒற்றி
வருகுவை யாயின் தருகுவென் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே" (அகம்-54.)

இது பாகற்குரைத்தது. இது முல்லைக்கட் காரும் மாலையும் வந்தது. அகம்,

---

*இவ்வடியே மணிமேகலை 5-ஆவது காதையில் 73-ஆவது அடியாக அமைந்துள்ளது.

"மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
யெவன்கொல் வாழி தோழி மயங்கி
இன்ன மாகவு நன்னர் நெஞ்சம்
என்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய இட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்பு
இட்டருங் கண்ண படுகுழி யியவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே." (அகம்-128)

இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப்பாளாக உரைத்தது. இது குறிஞ்சிக்குக் கூதிரும் யாமமும் வந்தது.

நிலனும் பொழுதும் முதலெனற்கமையிற் கார் முதலாதல் வேண்டும், வேண்டவே, அதற்கிடையின்றிக் கூறிய மாலையும் அதன் சினையாமாதலிற், கார்காலத்து மாலையென்பது பெற்றும் இது கூதிர்யாமம் என்பதற்கும் ஒக்கும்.

## எ. பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி, முற்கூறிய குறிஞ்சிக்கு முன்பனியும் உரித்தென்றலின்.

இதன்பொருள்—பனி எதிர் பருவமும் உரித்து என மொழிப—பனி முற்பட்ட பருவமுங் குறிஞ்சியொன்றற்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எதிர்தலென்பது முன்னுதல், எனவே, முன்பனியாயிற்று, அது ஞாயிறுபட்ட அந்திக்கண் வருதலின். உரித்தென்றதனாற் கூதிர்பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும் எனக்கொள்க.

உதாரணம்:—

"* * * *
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலை
* * * *" (அகம்-125)

என முன்பனியாமங் குறிஞ்சிக்கண் வந்தது.

### அ. வைகுறு விடியல் மருதம் எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்.

இனிச் சிறுபொழுதே பெறுவன கூறுகின்றது.

இதன்பொருள்.—வைகுறு விடியல் மருதம்—வைகறையும் விடியற்காலமும் மருதமாதலும், எற்பாடு நெய்தல் ஆதல் மெய் பெறத் தோன்றும்—எற்படுகாலம் நெய்தலாதலும் பொருள் பெறத் தோன்றும் என்றவாறு.

வைகுறுதலும் விடியலும் என்னும் உம்மை தொக்கு நின்றது. செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ என்றாற்போல வைகுறுதலை வைகுறு என்றார் அது மாலையாமமும் இடையாமமும் கழியுந்துணை அக்கங்குல் வைகுறுதல், அது கங்குல் வைகிய அறுதியாதலின் வைகறையென்றுங் கூறுப அதுவும் பாடம். நாள் வெயிற் காலையை விடியலென்றார் "விடியல் வெங்கதிர்காயும் வேய்மலகலறை"* என்ப. "விடியல் வைகறை யிடூஉ மூரன்"† என்றது விடியற்கு முன்னர்த்தாகிய வைகறை யென உருபுதொக்கு முன்மொழி நிலையலாயிற்று. பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளுங் காலம் அதுவாதலானும், தலைவிக்குக் கங்குல் யாமங் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடலுணர்த்தற் கெளிதாவதோர் உபகார முடைத்தாதலானும் வைகறை கூறினார் இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாதலின் இதனாற் பெறும் பயன் இன்றென முனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ் வைகறை வழித்தோன்றிய விடியற்கண்ணும் அவன் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின் விடியல் கூறினார்,

"வீங்குநீர்" என்னும் மருதக்கலியுள்,

"அணைமென்றோள் யாம்வாட அமர்த்துணைப் புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ
பொதுக்கொண்ட கௌவையிற் பூவணைப் பொலிந்தநின்
வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை." (கலி-66)

என மருதத்திற்கு வைகறை வந்தது.

"விரிகதிர் மண்டிலம்" என்னும் மருதக்கலியுள்,

"தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சி
யணங்குபோற் கமழுநின் னலமாற்றுக் காணிய." (கலி-71)

என மருதத்துக் காலை வந்தது.

---

* கலித்தொகை. ௪௫ † அகம். ௧௬௬

"காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி"* என்பதும் அது.

இனி வெஞ்சுடர் வெப்பந் தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நீழற் செய்யவுந், தண்பதம்பட்ட தெண்கழி மேய்ந்து பல் வேறு வகைப்பட்ட புள்ளெல்லாங் குடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவினாற்றம் முன்னின்று கஞற்றவும், நெடுந்திரை யழுவத்து நிலாக்கதிர் பரப்பவுங் காதல் கைமிகக் கடற்கானுங் கானற்கானும் நிறைகடந்து வேட்கைபுலப்பட உரைத்தலின், ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப்பட்டு இரங்கற்பொருள் சிறத்தலின் ஏற்பாடு நெய்தற்கு வந்தது,

உதாரணம் :—

" நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீன் அருந்தும்
பைங்கால் கொக்கின் †நிரைபறை யுகப்ப
எல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயின்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழில் மழைக்கண் கலுழ இவளே
பெருநாண் அணிந்த சிறுமென் சாயல்
மாணலஞ் சிதைய ஏங்கி யானாது
அழல்தொடங் கினளே பெரும அதனால்
கழிச்சுறு எறிந்த புட்டாள் அத்திரி
நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ
வல்வில் இளையரொ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே." (அகம்-120)

பகற்குறிக்கண் இட்டத்துய்த்துத் தலைவனை எதிர்ப்பட்டு உரைத்தது. நெய்தற்கு ஏற்பாடு வந்தது.

'கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப'|| என்பதனுண் மாலையும் வந்தது; கலியுண் மாலைக்காலம் நெய்தலின்கண் வந்தவாறு காண்க. இது மேல் 'நிலனொருங்கு மயங்குதலின்று'§ என்பதனாற் பெறுதும்.

இவற்றிற்கு அறுவகை இருதுவும் உரிய வென்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாகக் கொள்ப என்றற்குப் பொருள்பெறத் தோன்றும் என்றார்,

---

* குறுந்தொகை ௪௫ † கொக்கின்
|| அகம். ௪௦ § தொல், அகம். ௧௨

இனி நெய்தற்கு ஒழிந்த மூன்று காலமும் பற்றிவரச் சான்றோர் செய்யுட் செய்திலர், அக்காலத்துத் தலைவி புறம்போந்து விளையாடாமையின். அங்ஙனம் வந்த செய்யுளுளவேல் அவற்றையுங் கொள்க.

"கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்மில் பெருமொழி கூறித் தம்மில்
கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே. (குறு-8)

புறனுரைத்தாளெனக்கேட்ட பரத்தை தலைவனை நெருங்கித் தலைவன் பாங்காயினோர் கேட்ப உரைத்தது. இது முதுவேனில் வந்தது.

"அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை
அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் டித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை யாங்கண்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழையமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியானையின் முகனமர்ந் தாஅங்
கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பிற் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ள லஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்க்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேல் மத்தி கழாஅ ரன்னவெம்
இளமை சென்று தவத்தொல் லஃதே
இனியெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே." (அகம்-6.)

பரத்தையொடு புனலாடி வந்தமைகேட்டுத் தலைவி புலந்தது. இது இளவேனில் வந்தது. ஏனைய வந்தவழிக் காண்க

* அகம். ௪௦

'நாடகவழக்கானன்றி உலகியல் வழக்கானும் அச் சிறு பொழுதும் பெரும்பொழுதிற்குப் பொருந்து மென்றற்குத் தோன்று மென்றார். இதன் பயன் இவ்விரண்டு நிலத்துக்கு மற்றை மூன்று காலமும் பெரும்பான்மை வாராதென்றலாம்.

**௯. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.**

இது நிலனுடைய நான்கற்குங் காலங் கூறி அந்நான்கிற்கும் பொதுவாகிய பாலைக்குக் காலங் கூறுகின்றது.

இதன்பொருள்:— நடுவுநிலைத்திணையே — பாலைத்திணை, நண்பகல் வேனிலொடு — எற்பாடுங் காலையும் என்னும் இரு கூற்றிற்கு நடுவணதாகிய ஒரு கூறு தான் கொண்டு வெம்மை செய்து பெருகிய பெரும்பகலோடும் இளவேனிலும் வேனிலும் என்னும் இரண்டினோடும், முடிவுநிலை மருங்கின் — பிரிவென்பப் படுத்தற்கு முடிவுடைத்தாகிய குறிஞ்சியும் முல்லையுமாகிய ஒரு மருங்கின்கண்ணே, முன்னிய நெறித்து — ஆசிரியன் மனங் கொள்ளப்படும் நெறிமைத்து என்றவாறு.

நிலை யென்றது நிலத்தினை. முடிவுநிலைப்பகுதிக்கண் முன்னப் படுமெனவே அத்துணை யாக்கமின்றி ஒழிந்த மருதமும் நெய்தலும் முடியாநிலமாய் அத்துணை முன்னப்படாதாயிற்று. இது பாலைக் கென்பதாம். பிரிவின்கண் முடிய வருவனவெல்லாம் இவ்விரண்டற்கும் முடியவருதலும் ஒழிந்த இரண்டற்கும் அவை குறுகி வருதலும் முறையாற் கொள்க. என்னை? சுரத்தருமை அறியின், இவள், ஆற்றாளாமெனத் தலைவன் செலவழுங்குதலுந் துணிந்துபோதலும், உடன்போவலெனத் தலைவி கூறுதலும், அதனை அவன் விலக்கலும், இருந்திரங்கலும் போல்வன பலவும் முடியவரும் நிலங் குறிஞ்சியும் முல்லையு மாகலின் சுரத்தருமை முதலியன நிகழாமையின் மருதமும் நெய்தலும் அப்பொருண் முடிய வாராவாயின.

"நன்றே காதலர் சென்ற ஆறே
அணிநிற இரும்பொறை மீமிசை*
மணிநிற உருவின தோகையு† முடைத்தே" (ஐங்குறு-431)

இது சுரத்தருமை நினைந்து வருந்தினேனென்ற தலைவிக்கு அவ் வருமை நீங்கக் கார்காலமாயிற்றென்று ஆற்றுவித்தது. இப்பாட்டு முதலிய பத்தும் முல்லையுட் பாலை.

'கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்தின் தவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
ஆற்றவும் இருத்தல் வேந்தனது தொழிலே" (ஐங்குறு-451)

* 'இரும்புற மீமிசை' எனவும் 'அரும்பொறை மீமிசை' எனவும் பாடம்.
† 'உருவின் றோகை, எனவும் பாடம்.

இது பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைவி பாசறைச் செய்தி கேட்டு வருந்தியது.

மேற்கூறிய பருவங்கண்டு கிழத்தியுரைத்த இப்பத்தும் முல்லையுட் பாலை.

"கருங்கால் வேங்கை மாத்தகட்டு ஒள்வீ
இருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்
நன்மலை நாடன் பிரிந்தென
ஒண்ணுதல் பசப்பது எவன்கொல் அன்னாய்" (ஐங்குறு-219.)

இது வரைவிடை வைத்துப் பிரிந்துழித் தலைவி யாற்றாமை கண்டு தோழி கூறியது. இது குறிஞ்சியுட் பாலை.

'எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசலை செய்தன பனிபடு துறையே" (ஐங்குறு-141)

இது வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் துறையினைப் புணர்த்த காலான் வருத்திற்றெனத் தலைவி கூறியது. இது ஈரத்தருமை முதலியனவின்றி நெய்தற்குட் பாலை வந்தது. ஏனைய வந்துழிக் காண்க.

முந்நீர் வழக்கஞ் சிறுபான்மையாகலின் நெய்தற்கு முடிய வாராதாயிற்று. இக்கருத்தானே பிரிவொழுக்கம் மருதத்திற்கும் நெய்தற்குஞ் சிறுபான்மையாகப் புலனெறிவழக்கஞ் செய்யப்படும்.

எற்பாட்டிற்கு முன்னதாகிய நண்பகலைப் பாலைக்குக் கூற வேண்டிப் பின் வைத்தாரேனும் பெரும்பொழுதிற்கு முற்கூறுதலின் ஒருவாற்றாற் சிறுபொழுதாறும் முறையே வைத்தா ராயிற்று. காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைகூரச் சோலைதேம்பிக் கூவல் மாறி, நீரும் நிழலு மின்றி, நிலம் பயந் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதொரு காலமாதலின், இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலுஞ் சிறப்புடைத்தாயிற்று.

தெள்ளறல் யாற்றுத் திரைமணல் அடைகரை
வண்டு வரிபாடத் தண்போ தலர்ந்து
தாதுந் தளிரு மேதகத் துவன்றிப்
பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு
செவ்விதிற் றென்றல் ஒவ்விதிற் றூங்கிக்
குயில்கூஉக் குரலும் பயில
அதன்மேலும்
நிலவுஞ் சாந்தும் பயில்வுறு முத்தும்
இன்பம் விளைக்கு நன்பொருள் பிறவும்

பண்டைய போலாது, இன்பம் மிகத்தரும் இளவேனிற் காலத்துப், பொழில் விளையாடியும், புதுப்பூக் கொய்தும், அருவியாடியும் முன்னர் விளையாட்டு நிகழ்ந்தமைபற்றிப் பிரிந்த

கிழத்தி மெலிந்துரைக்கும் கிளவி பயின்று வருதலானும், உடன்போக்கின்கண் அக்காலம் இன்பம் பயக்குமாதலானும், இளவேனிலோடு நண்பகல் சிறந்ததெனப்பட்டது. பிரிந்த கிழத்தி இருந்து கூறுவன காரகால மன்மையின் முல்லையாகா.

உதாரணம் :—

"கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுறல் அங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
இரவுக்குறும் பலற நாறி நிரைபகுத்து
இருங்கல் முடுக்கர்த் திறறி கெண்டும்
கொலைவில் ஆடவர் போலப் பலவுடன்
பெருந்தலை எருவையொடு பருந்துவந் திருக்கும்
அருஞ்சுரம் இறந்த கொடியோர்க் கல்கலும்
இருங்கழை இறும்பின் ஆய்ந்துகொண் டுறுத்த
துணங்குகண் சிறுகோல் வணங்கிறை மகளிரொ
டகவுநர்ப் புரந்த வன்பின் கழல்தொடி
நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூர் அன்னநின்
அலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்
தாழேல் என்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்தல் எளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய அரும்பவிழ் வேனில்
அறலவிர் வாரமணல் அகலயாற் றடைகரைத்
துறையணி மருதொ டிகல்கொள வோங்கிக்
கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை அம்மஞ் சூர
நுகர்குயில் அகவுங் குரல்கேட் போர்க்கே" (அகம் 97)

இது வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி கூறியது.

இக் களிற்றியானைநிரையுள் இருவகை வேனிலும் பாலைக்கண் வந்தன. நண்பகலோடுவருவன வந்துழிக் காண்க. (௯)

## ௧0 பின்பனி தானும் உரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இதன் பொருள் :—நடுவு நிலைத்திணைக்கு முற்கூறிய வேனிலன்றிப் பின்பனிக்காலமும் உரித்து என்றவாறு.

இது கூதிரை, முன்பனியாகிய மார்கழியுந் தையுந் தொடர்ந் தாற் போல, வேனிலாகிய சித்திரை முதலிய நான்கற்கு முன் பின்பனியாகிய மாசியும் பங்குனியுந் தொடர்ந்ததென்று கூறி னார்.

உதாரணம்.—

“ ,கைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மலுள் வனப்பார விடுவதோ
புகையென்ப புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்பல் லுதிபொர முற்றிய கடும்பனி.” (கலி 31)

இது தனித்தோர்க்குப் பின்பனி ஆற்றற்கு அரிது, இஃதெலாக்கும் ஏதமாம் எனவும், இதனுள் இறந்துபடுவே னெனவுங் கூறிற்று

“அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்திற் றண்சிதர்ந் துறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியு நாளும் பலவா கவவே” (குறு - 104.)

தலைவி தோழிக்கு உரைத்தது.

இதுவும் அது

பின்பனிக்கு நண்பகல் துன்பஞ்செய்யா தென்பதூஉம் அதற்குச் சிறுபொழுது வரைவில வென்பதூஉங் கூறிற்று, என்னை? சூத்திரத்துத் தான் எனத் தனித்து வாங்கிக் கூறின மையின (௧௦)

## கக. இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும் உரிய தாகும் என்மனார் புலவர்.

இது பாலைப் பகுதி இரண்டெனவும் அவ்விரண்டற்கும் பின்பனி உரித்தெனவுங் கூறுகின்றது.

இதன் பொருள் —இருவகைப்பிரிவும் நிலைபெறத் தோன்றி னும்—நான்கு வருணத்தார்க்கும் காலிற் பிரிவும் வேளாளர்க் குக் கலத்திற் பிரிவுந் தத்தம் நிலைமைக்கேற்பத் தோன்றினும், உரியது ஆகும் என்மனார் புலவர்—பின்பனிக்காலம் அவ்விரண் டற்கும் உரிமைபூண்டு நிற்குமென்று கூறுவர் புலவர் என்ற வாறு.

கடலினை நிலமென்றமையிற் கலத்திற் பிரிவு முன்பகுத்த நிலத்துள் அடங்காதென்று, அதுவும் அடங்குதற்கு, ‘இரு வகைப் பிரிவும்’ என்னும் முற்றும்மை கொடுத்துக், காலிற் பிரி வோடு கூட்டிக் கூறினார். கலத்திற் பிரிவு அந்தணர் முதலிய

செந்திவாழநர்க்கு ஆகாமையின வேளாளர்க்கே உரித்தெனருர். வேத வணிகரலலாதாா கலததிற பிரிவு வேதநெறி யனமை யின் ஆராய்சசியினறு. இககருததானே இருவகை வேனிலும் நண்பகலும இருவகைப பிரிவிறகும ஒப்ப உரியவனறிக், காலிற பிரிவுக்குச் சிறத்தலுங, கலத்திற பிரிவிற்கு இளவேனி லொன றுங காறறுமிகாத முறபக்கத்துச சிறுவரவிற்ருய வருதலுங கொளக. ஒழிந்த உரிப பொருளகளிலும பாலை இடை நிகழு மெனறலிற பிரியவேண்டியவழி அவறறிற்கு ஓதிய காலஙகள கலத்திற பிரிவிறகும வந்தால் இழுககினறு. எனனை? கார காலத்துக் கலத்திறபிரிவும உலகியலாயப பாடலுட பயினறு வருமாயினெனக. தோனறினும எனற உம்மை சிறப்புமமை, இரண்டு பிரிவிறகும பினபனி உரிததெனறலின்

இனிக் கலத்திற பிரிவிறகு உதாரணம் :—

"உலகு கிளர்நதன்ன உருகெழு வங்கம
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவும எல்லையும அசைவின் ருகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்
மாட வொளளெரி மருங்கறிந தொய்ய
ஆளவினைப் புரிந்த காதலர் நாளபல
கழியா மையி னழிபட ரகல
வருவா மன்னுற ரேழி தண்பணைப
பொருபுனல வைப்பின் நமமூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற பகன்றைப்
பெருவள மலர அல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசுமபழுப் பாகல
கூதள மூதிலைக் கொடிநிரைத் தூஙக
அறனின் றலைக்கு மாறு வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்
திருநிழை நெகிழநது பெருங்கவின் சாய
நிரைவளை யூருந தோளென
உரையொடு செல்லு மன்பினாப் பெறினே" (அகம்-255.)

இது தோழி தூதுவிடுவது காரணமாக உரைத்தது. இம் மணிமிடை பவளததுப பினபனி வநதவாறும, நண்பகல் கூறு மையும் அவா குறித்தகாலம இதுவெனபது தோன்றியவாறுங் காண்க.

"குன்ற வெண்மண லேறி நின்றுநின்று
இன்னுங் காண்கம் வம்மோ தோழி
களிறுங கநதும் போல நளிகடற
கூம்புங் கலனுந் தோன்றுந
தோன்றன் மறநதோர் துறைகெழு நாட்டே."

வருகின்றாரெனக் கேட்ட தலைவி தோழிக்கு உரைத்தது. இது பின்பனிநின்றகாலம் வரைவின்றி வந்தது. கடலிடைக் கலத்தைச் செலுத்துதற்கு உரிய காற்றெழுபட்ட காலம் யாதானுங் கொள்க. ஆகுமென்றதனால் வேதவணிகரும் பொருளின்றி இல்லறம் நிகழாத காலத்தாயிற் செந்நீவழிபடுதற்கு உரியோரை நாட்டிக் கலத்திற் பிரிதற்கு உரியரென்று கொள்க. (௧௧)

௧௨. திணைமயக் குறுதலுங் கடிநிலை இலவே
நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே.

இஃது உரிப்பொருள் மயங்கு மென்றலின் மேலனவற்றிற்குப் புறனடை,

இதன் பொருள் :—திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே 'மாயோன்மேய' (ரு) என்பதனுள் ஒரு நிலத்து ஒரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம் அவ்வந்நிலத்திற்கே உரித்தாயொழுகாது தம்முண் மயங்கிவருதலும் நீக்கப்படா, நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று என மொழிப—அங்ஙனம் ஒரு நிலத்து இரண்டொழுக்கந் தம்முண் மயங்குதலன்றி இரண்டு நிலம் ஒரோவொழுக்கத்தின்கண் மயங்குதலில்லை யென்று கூறுவர், புலன் நன்கு உணர்ந்த புலமையோர்—அங்ஙனம் நிலனும் ஒழுக்கமும் இயைபு படுத்துச் செய்யும் புலனெறி வழக்கத்தினை மெய்பெற உணர்ந்த அறிவினையுடையோர் என்றவாறு

என்றது ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வருமென்பதூஉம் நிலன் இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டுந் தம்முள் மயங்குமென்பதூஉங் கூறினாராயிற்று. எனவே, ஒரு நிலமே மயங்குமாறாயிற்று உரிப்பொருண் மயக்குறுதல் என்னாது திணை மயக்குறுதலும் என்றார், ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப்பொருண் மயங்குதலும், ஓர் உரிப்பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும், இவ்வாறே காலம் மயங்குதலும், கருப்பொருண் மயங்குதலும் பெறுமென்றற்கு, திணையென்றது அம்மூன்றனையுங் கொண்டே நிற்றலின்

உதாரணம் :—

"அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த லுறங்கின † மார்பே தெய்யோ" (ஐங்குறு-240)

இது புறத்தொழுக்க மின்றென்றாற்குத் தோழி கூறியது.

† 'மார்பேன' எனவும் பாடம்

